Regd : No. TN - MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone 430212 4 பக்கம் விலை 50 கா.
POST WITHOUT PRE - PAYMENT LICENCE NO G 6 - TN - MS (C) P. P. 55



**லட்சியம்**

நடைமுறைக்கு ஏற்ற படி செயல்படுவதும் ஒரு லட்சியத்தின் மீது தான் இருக்கவேண்டும்.

- பேரறிஞர் அண்ணா



# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**குடும்பநலம்**

நல்வாழ்வும் நாணய மான வாழ்வும் பெற குழந்தைப் பேற்றைக் குறைத்துக் கொண்டு வாழ்க்கை வசதிகளை நல்ல வண்ணம் அமைத்துக் கொள்ள வேண்டும்.

-தந்தை பெரியார்



மலர் : 9 சென்னை 22-1-1985 செவ்வாய் ★ ★ ★ வெளியூர் 23-1-1985 புதன் இதழ் 96

★ வயதுக்கும் தகுதிக்கும் மீறிய பொறுப்பில் ஜெயலலிதாவை உட்கார வைத்தது என்னுடைய தவறு!

★ அவரை நம்பி இந்த இயக்கத்தை நாம் ஆரம்பிக்கவில்லை. 1977 - 1980ம் ஆண்டுத் தேர்தலில் இந்த அம்மையார் நம்மோடு இல்லை!

★ என்னுடைய அனுமதி இல்லாமலேயே டெல்லியில் சில முக்கிய தலைவர்களைச் சந்தித்து நம்முடைய கட்சியைப் பற்றி பலவீனமாக ஜெயலலிதா பேசிய விஷயங்களை நான் தெரிந்து வைத்திருக்கிறேன்!

★ எனக்குத் தெரியாமல் பல இடங்களில் என்னுடைய பெயரை ஜெயலலிதா பயன்படுத்துவதை இனியும் தாங்கிக் கொள்ளமுடியாது!

## வேறு கட்சிக்குப் போக

# ஜெயலலிதா சதி செய்கிறார்

## புரட்சித்தலைவர் பகிரங்கக் குற்றச்சாட்டு

**"அந்த அம்மையாரைப் பிடித்துக் காரியங்கள் செய்து கொள்ளலாம் என்று நம்பியிருப்பவர்கள் அந்த அம்மையார் பின்னாலே போகட்டும்".**

சென்னை, ஜன. 22- புரட்சித்தலைவரின் உடல்நிலை பற்றி தவறான பிரச்சாரத்தைச் செய்த கருணாநிதி கும்பலைத் தமிழக மக்கள் வேரோடும் வேரடி மண்ணோடும் தூக்கியெறிந்தார்கள். அதே பாணியில், கருணாநிதியைவிடக் கொடூரமான வார்த்தைகளில் புரட்சித் தலைவரின் உடல்நிலை பற்றி இதயமற்ற ஜெயலலிதா பேட்டியளிக்கிறார். கோடானு கோடி மக்களின் பிரார்த்தனைகளின் பலனாக மூன்றாம் பிறப்பெடுத்த இதயதெய்வத்தின் உடல்நிலை பற்றி கிஞ்சிற்றும் மனிதாபிமானமின்றிப் பேசி வருபவர்கள் கோடானு கோடி தமிழ் மக்களின் சாபத்திற்கு ஆளாகியுள்ளனர்.

ஜெயலலிதாவைப் பற்றி புரட்சித்தலைவர் என்ன கருதினார் - எப்படி ஒதுக்கி வைத்தார் - ஜெயலலிதாவின் சதிகளை எப்படி அறிந்து வைத்திருந்தார் என்பதை புரட்சித்தலைவர் பொதுக்குழுவில் ஆற்றிய உரை உலகிற்கு அறிவிக்கும்.



அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்தின் பொதுக்குழு சென்னையில் கடந்த ஆண்டு செப்டம்பர் முதல் தேதி நடைபெற்றது. இப்பொதுக்குழுவில் 1,500க்கும் மேற்பட்ட கழக முன்னணியினர் கலந்து கொண்டனர்.

இந்தப் பொதுக்குழுவில் முதல்வர் புரட்சித் தலைவர் ஆற்றிய உரையை கழகத்தவர் மறக்க முடியாது. ''அவர் அறியாததுஒன்றுமில்லை,, என்பதைஇந்தப்பேருரை உணர்த்திற்று.

நிலவிவரும் நிலவரங்களால் பொதுக்குழுவில் முதல்வர் புரட்சித் தலைவர் ஆற்றியஉரையை இங்கே தருகிறோம்:

கொள்கைபரப்புச் செயலாளர் பதவியிலிருந்து ராஜினாமாசெய்துள்ள செல்விஜெயலலிதா அவர்களின் ராஜினாமா கடிதத்தைநானேபொதுச் செயலாளர் ப. உ. ச. அவர்களிடம் சொல்லி ஏற்றுக் கொண்டதாக அறிவித்திருக்கலாம்.

ஆனால், அவருடைய விலகல்கடிதத்தைபொதுக் குழுவில் வைத்து ஏற்றுக் கொள்வது நலம் என்று கருதித்தான் இதுவரை காலந் தாழ்த்தினேன். இந்த விலகல் கடிதத்தை ஏற்றுக் கொள்ளும்படி உங்கள் அனைவரையும் நான் கேட்டுக் கொள்கிறேன்.

### தகுதியை மீறிய உயர்வு

சில உறுப்பினர்கள்:- இதை மறுபரிசீலனை செய்ய வேண்டுகிறோம்.

தொடர்ந்து முதல்வர் புரட்சித்தலைவர் பேசுகையில் கூறியதாவது:-

மறுபரிசீலனைக்கே இடமில்லை. வயதுக்கும், தகுதிக்கும் மீறிய பொறுப்பில் அந்த அம்மையாரை உட்கார வைத்தது என்னுடைய தவறு.

### இவராலா அப்போது வென்றோம்?

அவரை நம்பி இந்த இயக்கத்தை நாம் ஆரம்பிக்கவில்லை. 1977 ல் நடந்த தேர்தலிலும், 1980-ல் நடந்த தேர்தலிலும் இந்த அம்மையார் இல்லை.

### டெல்லியில் நடந்த சதி

என்னுடைய அனுமதி இல்லாமலேயே டெல்லியில் சில முக்கிய தலைவர்களைச் சந்தித்து நம்முடைய கட்சியைப பற்றி பலவீனமாகப்

2-ம் பக்கம் பார்க்க

## கழகப் பொதுச் செயலாளர் திருமிகு ப. உ. ச. அவர்களின்



## அறிக்கை

நம் கழகப் பிரச்சினைகள் குறித்து மாற்றுக் கட்சியினரிடம் போய் விவாதித்து பரிகாரம் தேட நினைப்பது நம் கழக விதிமுறைகளுக்கு மாறானது மட்டுமல்ல - கழகத்திற்கு கேடு விளைவிப்பதுமாகும்.

இத்தகைய செயல்களைத் தவிர்க்க வேண்டுமென்று நான் பலமுறை வேண்டிக் கேட்டுக் கொண்டுள்ளேன்.

கழகத்திற்கு எதிரான இத்தகைய நடவடிக்கைகள் கடந்த இரண்டு நாட்களாக உச்சக்கட்டம் அடைந்து நம் தலைவர் மாண்புமிகு புரட்சித்தலைவர் அவர்களின் உடல்நிலை குறித்தும்- உணர்வுகள் குறித்தும் - நம் எதிரிகளும் சொல்ல அஞ்சும் வகையில் விமர்சிக்கப் படுவது தாங்க முடியாத நெஞ்சு வலியை ஏற்படுத்துகிறது.

மாண்புமிகு புரட்சித்தலைவர் நல்ல உணர்வுகளோடும், நினைவுகளோடும்

(2-ம் பக்கம் பார்க்க)

**நாவலர் - ஆர். எம். வீ. - அண்ணியார் ஜானகி அம்மையார் பெயரை உச்சரிக்கும் தகுதியோ, இவர்களின் கால்தூசு அளவுகூட மதிப்புப்பெறும் யோக்கியதையோ ஜெயலலிதாவே-உனக்குகிடையாது! கட்சிக்குத் துரோகம் செய்யும் ஜெயலலிதாவே! போக விரும்பினால்**

# சீக்கிரம் போய்த் தொலை...!

"மத்தியப்புலனாய்வுத்துறை அதிகாரிகள் ஒரு அமைச்சர் வீட்டில் திடீர் சோதனை நடத்தியிருப்பதை அடுத்து, உள்ளபடியே அவருக்கு உடம்பில் சூடும், சொரணையுமிருந்தால் தமது பதவியை உடனடியாக ராஜினாமாச் செய்து இருக்க வேண்டும்"-

- வேறு காரணங்களால் வெறிபிடித்துப் போய்ப் புலம்பித் தவிக்கிற ஜெயலலிதா பத்திரிகைகளுக்கு மேற்கண்டவாறு பேட்டியளித்து இருப்பதைப் படித்தேன்.

என் வீட்டில் எந்தச் சோதனையும் நடக்கவும் இல்லை. நடக்க எந்தக் காரணமுமில்லை என்பதை மீண்டும் அழுத்தமாகத் தெரிவிக்கிறேன்.

### அமைச்சர் கா. காளிமுத்து

ஜெயலலிதா இப்படிப் பேட்டி தந்திருப்பதிலிருந்தே எதிர்க்கட்சி ஆட்களோடு கள்ளத் தொடர்பு கொண்டு, இப்படி ஒரு கற்பனைச் செய்தி, அவர்கள் பத்திரிகையில் வருவதற்கு ஊற்றுக்காலே ஜெயலலிதா தான் என்பதைப் புரிந்துகொள்ள முடிகிறது.

**நஞ்சினும் கொடிய வஞ்சகம் ஜெயலலிதாவின் இயல்பு என்பதை உணர்த்தியதற்கு நன்றி!**

என் சூட்டையும் - சொரணையையும் பரிசோதித்துப் பார்க்கத் துடிக்கிற ஜெயலலிதாவே! -

(2-ம் பக்கம் பார்க்க)

# காளிமுத்து கட்டுரை... (முதல் பக்கத் தொடர்ச்சி)

உன்னை நம்பிய கட்சிக்கும், தலைவனுக்கும் துரோகம் செய்கிற நீயா, எனக்கு ஆலோசனை சொல்வது?

**ஜெயலலிதா என்பவர் அனைத்திந்திய அண்ணா தி.மு.க.விற்கு ஏற்பட்ட பிணி - பீடை என்பது தான் கட்சித் தொண்டர்களின் உளப்பூர்வமான கருத்து.**

அந்தப் பீடை விலகுகிறது என்பதை எண்ணி, இயக்கம் மகிழ்ச்சியும் நிம்மதியும் பெற்றுக் கொண்டு இருக்கிறது.

ஜெயலலிதா என்பவர் கட்சிக்கு வந்ததிலிருந்தே கட்சியே களங்கப்பட்டுப் போயிருக்கிறது - என்று அப்போதே புரட்சித்தலைவரைச் சந்திக்கும் போதெல்லாம் சொன்னேன்.

கொள்கை பரப்புச் செயலாளராக, அவரை நியமித்தபோதும் புரட்சித்தலைவரிடம் எனது எதிர்ப்பைத் தெரிவிக்கத் தவறவில்லை.

'கட்சிக்குப் பணியாற்ற எவர் வந்தாலும் வாய்ப்பைத் தருவோம். பிறகு அவர்களது நடவடிக்கை எப்படி இருக்கிறது என்றுபார்த்து அவர்களை நாம் கட்டுப்படுத்தலாம்' - என்று புரட்சித்தலைவர் என்னைச் சமாதானப் படுத்தினார்.

ஜெயலலிதா என்பது இயக்கத்தையே நாசமாக்கும் தீய சக்தி என்பதைப் புரிந்து கொண்டுதான் கொள்கை பரப்புச் செயலாளர் பொறுப்பிலிருந்து புரட்சித்தலைவர் விலகச் சொன்னார்.

**இப்போதும்- கட்சியை விட்டே நீக்கியிருக்க வேண்டிய ஜெயலலிதாவை தன் பெருந்தன்மையின் காரணமாகத்தான் துணைத்தலைவர் பதவியிலிருந்து மட்டும் அகற்றியிருக்கிறார்.**

கொள்கை பரப்புச் செயலாளர் பதவியைத் திரும்பப் பெற ஜெயலலிதா செய்த சாகசங்களையும் - புரட்சித் தலைவர் 'அப்பல்லோ' மருத்துவமனையில் இருக்கும்போதே கட்சியை கைப்பற்ற ஆள் திரட்டிய உச்சகட்ட துரோகத்தையும் சூடும் சொரணையுமுள்ள இயக்கத் தொண்டன் மறந்து விடவில்லை.

**ஏதோ சில சலனங்களுக்கு ஆட்பட்டுக் கிடக்கிற சபலபுத்திக்காரர்களைத் தவிர மானமுள்ள எவரும், புரட்சித்தலைவர் மீது பற்றும் பாசமுமுள்ள எவரும் ஜெயலலிதாவின் கேடு கெட்ட கட்சித் துரோக நடவடிக்கைகளை ஆதரிக்கவில்லை.**

கட்சிக்குள்ளே தன்னை எதிர்ப்பவர்களையெல்லாம் வீழ்த்த எதிர்க்கட்சிகளோடும் கூட ரகசியத் தொடர்பு வைத்துக்கொண்டு ஜெயலலிதா செயல்பட்டார் என்பதை ஆதாரபூர்வமாகத் தெரிவிக்கிறேன்.

எனக்கு அந்தரங்கத் தூது அனுப்பிப் பார்த்தும் ஜெயலலிதாவின் வலையில் நான் விழாததால் - மதுரைகிழக்குத் தொகுதியில் என்னைத் தோற்கடிக்க ஜெயலலிதா பல லட்சம் பணம் செலவிட்டதை - பல முயற்சிகள் செய்ததை- தெளிவான விவரங்களோடு- ஆதாரங்களோடு புரட்சித்தலைவர் வந்ததும் தெரிவிக்க இருக்கிறேன்.

நாவலர் மீதும், ஆர். எம். வீ. மீதும், அண்ணியார் ஜானகிஅம்மையார் மீதும் ஜெயலலிதா அவதூறு பொழிகிறார்.

**இந்த மூவரும் கண் துஞ்சாமல் ஆற்றிய பணியினால் தான் கட்சியையும் தலைவரையும் நாம் பெற்று இருக்கிறோம் என்பதை நன்றி உணர்ச்சியுள்ள கட்சித் தோழன் மறக்க மாட்டான்.**



**இவர்கள் மூவரின் பெயரை உச்சரிக்கும் தகுதியோ- இவர்களின் கால் தூசு அளவுகூட மதிப்புப் பெறும் யோக்கியதையோ ஜெயலலிதாவிற்குக் கிடையாது.**

தன் பதவி பறிபோனவுடனேயே, 'புரட்சித் தலைவர் நல்ல உணர்வில் இல்லை' என்று கூசாமல் வாய்க் கொழுப்போடு சொல்கிற ஜெயலலிதாவின் 'விளக்கங்களை' நாடு நன்றாகப் புரிந்துகொண்டுவிட்டது.

புரட்சித்தலைவரே தனது வாரிசு. என்று கூறிய பாக்கியராஜை பரிகசிப்பதின் மூலமோ அல்லது மத்திய அரசுக்கும் கவர்னருக்குமே கட்டளையிடுவது போன்ற திமிரான விளக்கங்கள்மூலமோ ஏதேதோ காரணங்களுக்காக ஜெயலலிதா முன் பல்லைக்காட்டியும், பல்லக்குத் தூக்கியும் பிழைக்கக் கருதும் போலிகள் மூலமோ ஜெயலலிதா மீண்டும் அனைத்திந்திய அண்ணா தி மு. கவை ஆட்டிப் படைக்கக் கருதினால் அது நடக்காது!

**ஜெயலலிதாவிற்கு அறிவுரையாகத் தெரிவித்துக் கொள்கிறேன்:-**

ஜெயலலிதாவே! அனைத்திந்திய அண்ணா தி.மு.க என்பது புரட்சித்தலைவரின் தூய தலைமையில் லட்சக்கணக்கான தொண்டர்களின் ரத்தத்தாலும் வியர்வையாலும் வளர்ந்த - தன்மான திராவிடப் பேரியக்கம். இதை உன் வீட்டு நாய்க் குட்டியாகக் கருதாதே!

வேறு எங்காவது போக விரும்பினால் சீக்கிரம் போய்த் தொலை!

அதற்கு முன் இங்கிருக்கும் தலைவர்கள் மீது புழுதி வாரித்தூற்றினால் தமிழகத்தின் தாய்மார்கள் உனது அருவருப்புக்குரிய நடவடிக்கைகளுக்காக காரி உமிழ்ந்து உன்னை ஓட ஓட விரட்டியடிப்பார்கள்.

# மார்ச் 5-ந் தேதி புதுவையில் தேர்தல்

புதுடெல்லி, ஜன, 22- பாண்டிச்சேரி சட்டசபைத் தேர்தல் மார்ச் மாதம் 5-ந் தேதி நடைபெறும் என்று அதிகாரப்பூர்வமாக அறிவிக்கப்பட்டது.

10 மாநில சட்டசபைகளுக்கும், பாண்டிச்சேரிசட்டசபைக்கும் மார்ச் 5-ந்தேதி தேர்தல் நடைபெறும் என்று அந்த அறிவிப்பு கூறுகிறது.

# நாடாளுமன்ற துணை சபாநாயகராக தம்பித்துரை தேர்வு

நாடாளுமன்ற மக்களவை துணைத் தலைவராக கழக உறுப்பினர் எம். தம்பித்துரை தேர்ந்தெடுக்கப்பட்டார்.

துணை சபாநாயகர் பதவிக்கு தம்பித்துரை பெயரை,முதல்வர் புரட்சித்தலைவர் பரிந்துரை செய்திருந்தார்.

அதன்படி, துணைத்தலைவர் தேர்வுக்கு தம்பித்துரை பெயரை நாடாளுமன்ற விவகார ராஜாங்க அமைச்சர் குலாம்நபி ஆசாத் முன்மொழிந்தார்.

மக்களவை கழக துணைத்தலைவர் பி. குழந்தைவேலு வழிமொழிந்தார்.

தம்பித்துரையை துணைத் தலைவராக நியமிக்க 2 வேட்பு மனுக்கள் தாக்கலாகி இருந்தன.

வேறு எவரும் மனுத்தாக்கல் செய்யவில்லை மனுத்தாக்கல் நேற்றுடன் முடிவடைந்தது.

தம்பித்துரை துணை சபாநாயகராகத் தேர்ந்தெடுக்கப்பட்டது குறித்து இன்று அறிவிப்பு வெளியிடப்பட்டது.



மதுரையில் நிதியமைச்சர் டாக்டர் நாவலர் அதிகாரிகளுடன் ஆலோசனை நடத்துகிறார்.

# ஜெயலலிதா சதி...

(முதல் பக்கத் தொடர்ச்சி)

பேசிய விஷயங்களை நான் தெரிந்து வைத்திருக்கிறேன்.

## இனிபொறுப்பது இல்லை

என்னைக் கேட்காமலேயே என் பெயராலே அறிக்கைகள் விடுவதும், குறிப்பாக ஆந்திர மாநிலத்தில் சகோதரர் என்.டி.ராமாராவ் அவர்களின் ஆட்சி கலைக்கப்பட்டதுகுறித்து அறிக்கை விட்டதும், பிறகுஅந்த அம்மையாரே அதைத் திரும்பப் பெற்றதும் கண்டிக்கத்தக்கது.

இவைகள் எதுவும் கட்சியையோ, என்னையோ கலந்து பேசி தெரிவித்த கருத்துக்கள் இல்லை.

இப்படிப் பல முறை எனக்குத் தெரியாமல் பல இடங்களில் என்னுடைய பெயரைப்பயன் படுத்துவதை என்னாலே இனியும் தாங்கிக்கொள்ள முடியாது.

## வேறு கட்சிக்கு போக பயங்கர திட்டம்

அவர் வேறு கட்சிக்குப் போவதற்கான வேலைகளைச் செய்துகொண்டிருக்கிறார். அந்த அம்மையாரைப் பிடித்துக் காரியங்கள் செய்து கொள்ளலாம் என்று நம்பியிருப்பவர்கள் அந்த அம்மையார் பின்னாலே போவது பற்றியும் எனக்குக் கவலை இல்லை.

## ஆர்.எம் வீ-முசிறியார்

வீரப்பன் அவர்கள் எப்போது வந்தார் என்று சிலபேர் கேட்கிறார்கள். வீரப்பன்அவர்கள் கடந்த 30 ஆண்டுகாலமாக என்னோடு இருப்பவர். கட்சி துவங்கி ஆட்சிக்கு வந்த பின்னாலேநான் அவருக்கு அமைச்சர் பதவி தருகிறேன் என்று சொன்ன போது என்னிடம் மாதம் 500 ரூபாய் வாங்குகிற வாய்ப்பு நின்று போய் விடுமே என்று அமைச்சர் பதவியையே வேண்டாம் என்றார். அமைச்சர் பதவியும் உண்டு, நான் தரும் 500 ரூபாயும் உண்டு என்று சொன்ன பின்பு தான் மந்திரி பதவியை ஏற்றுக் கொண்டவர். அது போலவே இன்றைக்கும் என்னிடம் மாதம் 500 ரூபாய் வாங்கிக் கொண்டிருக்கிறார்.

நீங்கள் எல்லோரும் என்னுடைய நம்பிக்கையைப் பெற்றவர்கள் தான். ஆனால் வீரப்பனும், மன்றத் தலைவர்முசிறிப்புத்தனும் கலைத்துறை, அரசியல் பணிகளில் தொடக்க காலம் முதல் தொடர்ந்து என்னைப் பின்பற்றி வருகிறவர்கள்.

என்பின்னாலே வந்தால் என்னகிடைக்கும் என்பது பற்றியெல்லாம் சிந்திக்காமல் சோதனைக் காலங்களிலெல்லாம் எனக்கு அரணாகவும், ஆயுதமாகவும் இருந்து வந்தவர்கள் இப்போதும் இருக்கிறார்கள்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் பேசினார்.

முதல்வர் பேசி முடித்தவுடன் உறுப்பினர்கள் 'புரட்சிதலைவர் வாழ்க' என்று பலத்த முழக்கமிட்டனர். உறுப்பினர்களின் பலத்த முழக்கத்துடன் ஜெயலலிதாவின் விலகல் கடிதம் ஏகமனதாக பொதுக்குழுவில் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

செயற்குழுவிலும் இது ஏகமனதாக ஏற்றுக் கொள்ளப்பட்டது.



# ப. உ. ச. அறிக்கை... (முதல் பக்கத் தொடர்ச்சி)

உள்ளார் என்ற உண்மையைப் பலரும் உறுதி செய்துள்ளனர் இந்த உண்மையை ஏற்க மறுத்தவர்கள் தேர்தலில் என்ன ஆனார்கள் என்பதை அறிந்த பின்னரும் அதே பாணியை நம்மில் சிலர் கடைபிடிப்பது ஆச்சரியமாக உள்ளது

**அண்மையில் நாடாளுமன்றக் குழுவில் சில மாற்றங்கள் செய்யப்பட்டது புரட்சித்தலைவரின் ஆணைப்படியே நடந்தது ஆகும்.**

**புரட்சித்தலைவரின் கடிதம் கிடைத்தவுடன் அதுபற்றி மீண்டும் புரட்சித்தலைவருடன் ஆலோசனை கேட்டு, அவருடைய கடிதப்படி மாற்றங்கள் செய்ய வேண்டும் என்று புரட்சித்தலைவர் கடிதத்தை உறுதிப்படுத்திக்கொண்டதற்குபிறகு தான் மாற்றங்கள் செய்யப்பட்டன**

மாநிலங்களவை உறுப்பினர்கள் கூட்டம் தலைமைக் கழகத்தில் நடைபெற்றது. இதற்கு வருமாறு திருமிகு ஜெயலலிதாவுக்கு தலைமைக் கழகத்திலிருந்து சொல்லப்பட்டது.

"கூட்டம் தொடங்கி விட்டது. ஆகவே வர வேண்டும்" என்று மறுபடியும் தொலைபேசியில் செய்தி சொல்லப்பட்டது.

கற்பனையில் பகைவர்களை உருவாக்கிக் கொண்டு எரிச்சலைக் கொட்டுவது புத்திசாலித்தனமல்ல.

அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக்கழகம் "உழைக்காது விளைந்த கழனியுமல்ல. பாதுகாப்பு இல்லாத பழத்தோட்டமுமல்ல" இக்கழகத்திற்கு மெருகேற்றியவர்கள் யார் என்று சர்ச்சையிடுவதைவிட "யார் கருவிலிருந்து காப்பாற்றியவர்கள்" என்பதை அறிந்து கொள்வது மேல்.

புரட்சித்தலைவர் தாயகம் திரும்ப இன்னும் இரண்டே வாரங்கள் தான் உள்ளன. அனைவருடைய சந்தேகமும் அன்றோடு தொலைந்து போகும் அதுவரையில் மேலும் கழகத்திற்கு எந்தவித கேட்டையும் விளைவிக்காமல் பொறுமையோடு இருக்குமாறு அனைவரையும் தாழ்மையோடு கேட்டுக் கொள்கிறேன்.

ப.உ. சண்முகம்
பொதுச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம்

சென்னை-14
22 1-85

சுற்றுப்புற தூய்மைக்கேடு:

# கடும் சட்டம் இயற்ற மத்திய அரசு முடிவு

புதுடெல்லி, ஜன. 22- ரசாயன ஆலைகள் போன்றவற்றிலிருந்து வெளியேறும் கழிவுகளை சரியான முறையில் தடுக்காமல் இருக்கும் ஆலைகள் மீது நடவடிக்கை எடுக்க கடுமையான சட்டம் கொண்டு வருவது பற்றி, அரசு பரிசீலித்து கொண்டிருப்பதாகமத்திய ரசாயன அமைச்சர் வீரேந்திரபாட்டீல் நாடாளுமன்றத்தில் தெரிவித்தார்.

வியாசர்பாடியில் இன்று (மாலை) பொதுச் செயலாளர் **ப. உ. ச.** பேசுகிறார்

★ புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர். வற்புறுத்தியதுபோல் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளை மக்கள்

# திரும்ப அழைக்கும் உரிமைவேண்டும்

## நாடாளுமன்றத்தில் குழந்தைவேலு கன்னிப் பேச்சு

புதுடெல்லி ஜன 22 முதல்வர் புரட்சித்தலைவர் வற்புறுத்தியதுபோல் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் பிரதிநிதிகள் சரிவர செயல்படவில்லையென்றால் அவர்களைத் திரும்பப்பெறும் உரிமை மக்களுக்கு வழங்கப்பட வேண்டுமென்று நாடாளுமன்ற (மக்கள் சபை) கழக அணித் தலைவர் குழந்தைவேலு தனது கன்னிப்பேச்சின் போது குறிப்பிட்டார்.

நாடாளுமன்ற (மக்கள் சபை) கழக அணித் தலைவர் குழந்தைவேலு நேற்று நாடாளுமன்றத்தில் தனது 'கன்னி' உரையை ஆற்றினார். அவர் பேசுகையில் கூறியதாவது:-

எதிர்கால இந்தியாவின் நவீன மேலாளராக காட்சி தரும் பிரதமர் ராஜீவ்காந்தி இந்தியா முழுவதும் ஓடும் எல்லா ஆறுகளையும் தேசியமயமாக்க வேண்டும்.

ஆறுகள் தேசிய மயமாக்கப்பட்டால் தான், எல்லா மாநிலங்களிலும் சமபங்கு பாசன வசதி கிடைக்கும்.

வறட்சிபகுதி, வளமான பகுதி என்ற வேறுபாடு மறைந்துஇந்திய ஒருமைப்பாட்டிக்கு உதவுவதாக இருக்கும்.

கட்சித்தாவல்தடை சட்டம் நாடாளுமன்றத்தில் கொண்டுவர இருப்பதை வரவேற்கிறேன். அதற்கு ஒரு திருத்தம் கொண்டுவரவேண்டும் என்று விரும்புகிறேன்

தேர்ந் தெடுக்கப்பட்ட சட்டமன்ற, பாராளுமன்ற உறுப்பினர்கட்சியிலிருந்து நீக்கப்பட்டால், பதவி இழப்பார்கள் என்று கட்சித் தாவல் தடை சட்டம் கூறுகிறது. இது நீக்கப்படவேண்டும்

### காவிரிப் பிரச்னை

எந்தக் கட்சியிலும் தலைவர் சர்வாதிகாரியாக செயல்பட்டாலோ, யாரையும் நீக்கும் நிலையை சட்டம் உருவாக்கிவிடும்.

உறுப்பினர்களின் அடிப்படை உரிமை இதன்மூலம் பறிக்கப்படுகிறது.

இதற்கு பதிலாக எங்கள் தலைவர் முதல்வர் எம்.ஜி.ஆர். வற்புறுத்திவந்த, தேர்ந்து எடுக்கப்பட்ட உறுப்பினர்களை மக்கள் திரும்ப அழைக்கும் உரிமையை மக்களுக்கே அளிக்கும்வகையில்சட்டத் திருத்தம் கொண்டுவர வேண்டும்.

காவிரிப் பிரச்னைக்கு இன்னும் பரிகாரம் காணப்படவில்லை, இது பற்றிய கடந்த 1924-ம் ஆண்டு ஒப்பந்தம் நிரந்தரமானது. காலாவதியாகவில்லை என்பது தான் தமிழ்நாட்டின் நிலை இதை மத்திய அரசு ஏற்று இந்த பிரச்னைக்கு தீர்வு காணவேண்டும்.

கங்கை ஆற்றுடன் காவிரி, கோதாவரி ஆறுகளை இணைத்து தென் மாநிலத்தில் குறிப்பாக தமிழ்நாட்டில் வறட்சியால் பாதிக்கப்பட்ட பகுதிகளை வளமான பகுதியாக மாற்ற வேண்டும்.

வெள்ளப் பெருக்கு ஏற்படும் நேரங்களில் வெள்ளப் பெருக்கைத் தடுத்து தடுக்கப்பட்ட நீரை தகுந்த முறையில் பயன் படுத்தி நாட்டுக்கு நன்மை விளைவிக்கும் நிலையை உருவாக்க வேண்டும்.

### சத்துணவை திட்டத்தில் சேர்ப்பீர்

தமிழ் நாடு முதலமைச்சரின் சத்துணவு திட்டத்தை பிரதமரின் 20 அம்சத் திட்டத்தில் சேர்த்து நிதி ஆதாரங்களை ஒதுக்கவேண்டும்.

மறைந்த பிரதமர் இந்திராகாந்தி சமாதானத்திற்காக நோபல் பரிசு பெற்ற அன்னை தெரசா ஆகியோர் பாராட்டியது இந்த சத்துணவு திட்டம் ஆகும்.

தமிழ்நாட்டில் வெற்றிகரமாக நிறைவேற்றப்பட்ட தன்னிறைவு திட்டங்களை மற்ற மாநிலங்களிலும் நிறைவேற்ற வேண்டும்.

இலங்கை தமிழர்களின் இன்னல்களைத் தீர்க்க மத்திய அரசு உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டும். இலங்கையில் ஏற்படும் படுகொலைகளைத் தடுத்து தமிழர்களைசுதந்திரமாக வாழவைக்க வழி வகை காணவேண்டும்.

வடநாட்டில் உள்ள பக்ரா நங்கல் அணைக்கட்டு திட்டம் போன்று தமிழ் நாட்டிலும் ஏற்படுத்தவேண்டும் பெருமை மிக்க தாயின் மகனாக இருக்கக் கூடிய ராஜீவ் காந்தி இதற்கு வழி வகை செய்வார் என நம்புகிறேன்.

நாடு முழுவதும் தேசிய கல்வியை கொண்டு வர இருப்பதாக அறிவிக்கப்பட்டுள்ளது.

மாநில அளவில் கல்வி கொள்கையைஅமுல் நடத்தினால் தேசிய ஒற்றுமைக்கு ஊறுவிளைவிக்காமல் இருக்கும்.

பெண்களுக்கு இலவச கல்வி அளிக்கப்படுமென்று அறிவிக்கப் பட்டுள்ளது. தமிழ்நாட்டில் பள்ளி இறுதி வகுப்பு வரை இலவச கல்வி எல்லோருக்கும் வழங்கப்படுகிறது எனவே இந்த வகைக்கு தமிழக அரசு இதுவரை செய்துவந்த செலவை மத்திய அரசு திருப்பித் தரவேண்டும்.

இவ்வாறு குழந்தை வேலு எம்.பி.பேசினார்.

### எதிர்கட்சிகள் ஆதரவு

கட்சி தாவல் தடுப்பு மசோதா குறித்து, எதிர்கட்சி தலைவர்களின் கருத்தை பிரதமர் அறிந்தார்-

எதிர்கட்சித்தலைவர்கள் அனைவரும் இந்த மசோதாவை பெரிதும் வரவேற்றனர்.

இவ்வாறு ஒரு சட்டம் கொண்டுவருவது நல்லது என்ற ஒருமித்த கருத்து உருவாகியுள்ளது.

---

## தமிழ்நாடு சிறைத்துறை

மத்தியசிறை சென்னை.

### டெண்டர் அறிவிப்பு

தமிழ நாடு ஆளுநர்அவர்களுக்காகவும் அவர்களின் சார்பாகவும் 1985-86 ம் ஆண்டுக்கு. செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள கீழ்க்கண்ட கிளைச் சிறைச்சாலைகளுக்குஉணவுமற்றும் இதர பொருட்களை வழங்குவதற்கான மூடிமுத்திரையிடப்பட்ட டெண்டர்கள் 12-2-85,பிற்பகல் 5,00மணி வரை வரவேற்கப்படுகின்றன.

1. கிளைச்சிறை, செங்கல்பட்டு
2. கிளைச்சிறை மதுராந்தகம்
3. கிளைச்சிறை காஞ்சிபுரம்
4. கிளைச்சிறை பூந்தமல்லி
5. கிளைச்சிறை சைதாப்பேட்டை
6. கிளைச்சிறை பொன்னேரி
7. கிளைச்சிறைதிருத்தணி
8. கிளைச்சிறை திருவள்ளூர்

2. மூடிமுத்திரையிடப்பட்ட டெண்டர்கள், ஒவ்வொரு கிளைச் சிறைச்சாலைக்கும், தனித்தனியான உறைகளில் ஒப்புகைப் பதிவு அஞ்சலில் கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பப்பட வேண்டும்.

திரு.டி.ஜே.தாமஸ், பி.ஏ.
கண்காணிப்பாளர்
மத்திய சிறை,
சென்னை 600003

டெண்டர்களை அஞ்சல் மூலம் அனுப்ப இயலாவிடில் சென்னை மத்திய சிறைச்சாலையில் அதற்காக வைக்கப்பட்டுள்ளடெண்டர் பெட்டியில் நிர்ணயம் செய்யப்பட்ட உரிய தேதியில் குறித்த நேரத்திற்குள் சேர்ப்பித்திட வேண்டும்.

3. டெண்டர்கள் சென்னை மத்திய சிறை கண்காணிப்பாளர் அலுவலகத்தில் 13-2-85 அன்று முற்பகல் 11 மணிக்குத் திறக்கப்படும்.

டெண்டர்கள் எக்காரணத்தைக் கொண்டும் நேரில் பெற்றுக் கொள்ளப்பட மாட்டாது.

டெண்டர் நமூனாக்கள், நிபந்தனைகள் மற்றும் வழங்கீடு செய்வதற்கான பொருட்கள், விவரங்கள் அடங்கிய ஷெட்யூல்களை சென்னை மத்திய சிறைச்சாலையில் கண்காணிப்பாளரின் அலுவலகத்தில் அல்லது சம்பந்தப்பட்ட கிளைச் சிறையின் கண்காணிப் பாளரிடமிருந்தோ ரூ. 5-25யினை செலுத்தி பெற்றுக் கொள்ளலாம். டெண்டர் நமூனாக்களின் கட்டணம் திருப்பித் தரப் பட்மாட்டாது.

கண்காணிப்பாளர்

DIPR- No. 6-85-12-SA3

---

பெரம்பூர் தொகுதியில், கழக அணி வேட்பாளர்களை ஆதரித்து, அமைச்சர் ராகவானந்தம், வை. பெருமாள் ஆகியோர் தேர்தல் பிரச்சாரம் செய்தனர்.

---

25-ந் தேதி வீரவணக்க நாள்

தமிழ்மொழி காக்க தன்னுயிர் ஈந்த

# 'மாணவர்கட்கு வீர வணக்கம் செலுத்துவோம்'

## லியாகதஅலிகான் அறிககை

சென்னை, ஜன. 22 தமிழ்மொழி காக்க தன்னுயிர் ஈந்த தியாக தீபங்களாம மாணவர்களுக்கு 25-ந் தேதி வீர வணக்கம் செலுததிடுவோம் என மாணவர் அணி துணைச் செயலாளர் லியாகதஅலிகான் கேட்டுக் கொண்டுள்ளார்.

மாணவர் அணித் துணை செயலாளர் கா. லியாகத் அலிகான்விடுத்துள்ளஅறிக்கையில் தெரிவித்துள்ளதாவது:

தாய் மொழியாம் தமிழ் மொழிகாக்க, தன்னுயிர் ஈந்த மாணவர்களுக்கு ஆண்டு தோறும் ஜனவரி 25-ந் தேதி வீர வணக்கம் செலுத்தி வருகிறோம்.

### தியாக தீபங்கள்

தலைமைக் கழகம் அறிவித்துள்ளவாறு வீர வணக்க நாள் கூட்டங்களை நடத்தி மாணவ தியாக தீபங்களுக்கு அஞ்சலி செலுத்த உள்ளோம்.

தமிழகத்தில் 1965ம் ஆண்டு ஜனவரி 25ல் உண்டான களத்தைக் கண்டு-களத்திலே மடிந்த மாணவர்களின் தமிழ் மொழி உணர்வைக் கண்டு மருண்டவர்கள்தங் களின்ஆதிக்க எண்ணத்தை மாற்றிக் கொண்டனர்.

### அண்ணா வழியில்...

யார் மேலும் ஆதிக்கம் செலுத்தமாட்டோம்-யாரையும் எங்கள் மீது ஆதிக்கம் செலுத்தவிட மாட்டோம் என்ற உணர்வுகளுடன், தமிழ் மொழி பிறமொழியைத் தாழ்த்தாது. பிறமொழி தமிழைத் தாழ்த்துவதை தமிழகம் தாங்காது, என்ற நெறியுடன் அறிஞர் அண்ணா அவர்கள் ஆற்றிய சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக்கழக உரையை மனதிலே ஏற்று தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் தமிழைப் பாதுகாத்து ஆட்சி நடத்துவதை அனைவரும் பாராட்டுகின்றனர்.

தமிழைப் பாதுகாக்க தனிப்பல்கலைக்கழகம்!

தமிப்புலவர்களுக்கு மாதந்தோறும் உதவித் தொகை!

தமிழறிஞர்களுக்கு திரு வி. க விருது!

தமிழ்மொழியில் நீதிமன்ற நடவடிக்கைகள்!

இப்படி எண்ணற்ற சேவைகளை தமிழுக்காக முதல்வர் புரட்சித்தலைவர் ஆற்றி வருகிறார்.

### இளமை வளமை

தமிழ் இளமையை-வளமையை-இனிமையை — வழக்கிலே வாழ்வதை - வாழ்விலே ஒன்றிவிட்டதை-உருக்குலைக்க முயன்ற ஆதிக்க இந்தியை எதிர்த்து, உயிர் நீத்திட்ட வீரச்சிங்கங்களுக்கு வணக்கம் செலுத்திடும் வீரவணக்க நாளில்,

8-ம் பத்தி பார்க்க

---

## கிராம மக்கள் வாழ்வை மேம்பாடு அடைய செய்வீர்

### வைஜயந்திமாலா எம். பி. கோரிக்கை

புதுடெல்லி, ஜன. 22- கிராம மக்களின் வாழ்வை மேம்பாடு அடைய செய்ய வேண்டும் என்று நாடாளுமன்றத்தில் வைஜயந்தி மாலா எம்.பி. தனது கன்னிப் பேச்சின்போது குறிப்பிட்டார்.

தென்சென்னை நாடாளுமன்ற உறுப்பினர் வைஜயந்திமாலா நேற்று முதன் முறையாக நாடாளுமன்றத்தில் பேசினார். அவர் பேசுகையில் கூறியதாவது:-

குடும்பக்கட்டுப்பாடு திட்டத்தை தீவிரமாக அமுல்படுத்த வேண்டும். மக்கள்தொகையைகட்டுப்படுத்தவும், வறுமையை ஒழிக்கவும் இது ஒன்று தான் வழி.

இந்தத் திட்டம் வெற்றிபெற வேண்டுமானால்மக்களை இதில் ஈடுபாடு கொள்ளச் செய்ய வேன்டும்.

கிராமங்களை அழகுற செய்ய வேண்டும். கிராமப்புற மக்களுக்கு அடிப்படை வசதிகளைச் செய்து கொடுக்க வேண்டும்.

கிராமப்புற மக்களுக்கு அங்கேயே வேலை வாய்ப்பை உருவாக்கித் தருவது தான் கிராமங்கள் வளர்ச்சி பெற உதவும்'

பெண்களுக்கு இலவச கல்வி அளிக்க அரசு முன் வந்திருக்கிறது. இது வரதட்சணைக் கொடுமையை ஒழிக்கப்பயன்படும்.

இவ்வாறு வைஜெயந்தி மாலா பேசினார்.

---

6-ம் பத்தி தொடர்ச்சி

அனைத்து மாவட்ட மாணவ அமைப்பாளர்களும், தொகுதிமாணவப் பொறுப்பாளர்களும், மாணவர் அணியினரும் பங்கேற்று மாண்வ தியாக தீபங்களுக்குவீர வணக்கம் செலுத்திட வேண்டுமென கேட்டுக்கொள்ளுகிறேன்.

இவ்வாறு லியாகத் அலிகான் தெரிவித்துள்ளார்.

---

## தமிழ்நாடு அரசு பரிசுசீட்டு குலுக்கல் முடிவுகள்

### 167-வது குலுக்கல் முடிவுகள்

### நாள்: 20-1-85 சென்னை

முதல் பரிசு ரூ. 1,00,000
(எல்லா வரிசைக்கும் பொது)

**ஆர் ஜி 037520 தஞ்சாவூர்**

இரண்டாம் பரிசு ரூ. 10,000
(முதல் பரிசு பெறாத மற்ற இரு வரிசைகளுக்கும்)

| RH வரிசை | RI வரிசை |
| --- | --- |
| 416427 - வெளிமாநிலம் | 062028 - தஞ்சாவூர் |

எல்லா வரிசைக்கும் பொது:

மூன்றாவது பரிசு ரூ. 500 (150 பரிசுகள்)
(கடைசி ஐந்து எண்களில் முடியும் சீட்டுகளுக்கு)

| | | | | |
| --- | --- | --- | --- | --- |
| 05143 | 09[illegible]72 | 14018 | 16200 | 18345 |
| 48881 | 52205 | 73164 | 76001 | 94763 |

நான்காம் பரிசு ரூ. 50 (1500 பரிசுகள்)
(கடைசி நான்கு எண்களில் முடியும் சீட்டுகளுக்கு)

| | | | | |
| --- | --- | --- | --- | --- |
| 0464 | 1564 | 6177 | 6199 | 6367 |
| 7082 | 7877 | 8989 | 9177 | 9285 |

ஐந்தாம் பரிசு ரூ. 20 (1,500 பரிசுகள்)
(கடைசி நான்கு எண்களில் முடியும் சீட்டுகளுக்கு)

| | | | | |
| --- | --- | --- | --- | --- |
| 0670 | 1109 | 1580 | 2025 | 4112 |
| 4221 | 4462 | 6617 | 8523 | 8947 |

ஆறாம் பரிசு ரூ. 10 (15,000 பரிசுகள்)
(கடைசி மூன்று எண்களில் முடியும் சீட்டுகளுக்கு)

| | | | | |
| --- | --- | --- | --- | --- |
| 156 | 177 | 210 | 346 | 358 |
| 716 | 924 | 951 | 967 | 974 |

ஏழாம் பரிசு ரூ. 5 (60,000 பரிசுகள்)
(கடைசி மூன்று எண்களில் முடியும் சீட்டுகளுக்கு)

| | | | | | |
| --- | --- | --- | --- | --- | --- |
| 013 | 022 | 024 | 06[illegible] | 073 | 084 |
| 087 | 092 | 101 | 118 | 122 | 135 |
| 161 | 182 | 253 | 263 | 303 | 308 |
| 315 | 322 | 349 | 360 | 380 | 388 |
| 412 | 506 | 543 | 556 | 561 | 580 |
| 593 | 62[illegible] | 647 | 743 | 803 | 808 |
| 824 | 842 | 865 | 924 | | |

பரிசுத் தொகை பெற விண்ணப்பிக்க வேண்டிய கடைசி நாள்:-
அரசு கருவூலங்களில்: 19-4-1985
ஆணையர் அலுவலகத்தில்: 18-7-1985
ஆணையர், தமிழ்நாடு பரிசுச் சீட்டு திட்டம்.
233, என்.எஸ்.சி. போஸ் ரோடு,
தமிழ் மாநில கூட்டுறவு வங்கி கட்டிட
ஐந்தாவது தளம், சென்னை-600 001,
அடுத்த குலுக்கல் 30-1-1985 அன்று திருச்சியில் நடைபெறும்.

DIPR-217-85

Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D. M. K. Perarignar Anna-Trust Press at 34, Nelson Manickam Road, MADRAS-600029

தி. மு. க. அணிக்கு எதிராக வாக்களித்த

முஸ்லிம்களுக்கு எதிராக ஜாதிக்கட்டுப்பாடு ஏன்?

# முஸ்லிம் லீகின் சர்வாதிகாரத்திற்கு கடும் எச்சரிக்கை

## அமைச்சர் யூசுப் பதிலடி அறிக்கை

**சென்னை, ஜன. 22- தி.மு.க. அணிக்கு வாக்களிக்கும்படி முஸ்லிம்லீகினர் திருக்குர்ஆன் மீது சத்தியம் வாங்கினர். எதிராக வாக்களித்த முஸ்லிம்களை சமுதாயத்தை விட்டு விலக்கி வைத்துள்ளனர். முஸ்லிம்லீகின் இந்த சர்வாதிகாரப் போக்கிற்கு எதிராக முஸ்லிம் சமுதாயம் திரண்டெழும் என்று அமைச்சர் யூசுப் எச்சரித்துள்ளார்.**

முஸ்லிம்லீக் தலைவர் அப்துல்சமத் அறிக்கைக்கு பதிலடிதரும் அறிக்கையில் அமைச்சர் யூசுப் கூறியிருப்பதாவது:-

தமிழக முஸ்லிம்கள் மற்ற சமுதாயத்தவர்களிடமிருந்து விலகி நின்று தங்களது தாய் சபையின் ஆணையின்படி ஒட்டுமொத்தமாக, ஒருமைப்பாட்டுடன் வாக்களித்ததாக சமத்சாகிப் கூறியுள்ள உண்மைக்குப் புறம்பான, போலியான கருத்துக்கள் கண்டிக்கத்தகுந்தது. ஆட்சேபணைக்குரியவை.

நான் வெளியிட்ட சாதாரணமான ஒருஅறிக்கையை தாங்கமுடியாமல் இத்தகு மிரட்டலில் ஈடுபடும்இந்த 'தாதாக்கள்' தங்களுக்கு எதிராக வாக்களிக்க விரும்பிய பாமர முஸ்லிம்களைத் தடுக்க எப்பேர்பட்ட கொடுமைகளை புரிந்திருப்பார்கள் என சிந்திக்கத் தூண்டுகிறது.

## சுதந்திரத்தை பறிப்பதா?

முஸ்லிம் லீக்கர் பல பகுதிகளில் குறிப்பாக ராமநாதபுரம், தஞ்சை மாவட்டங்களில் முஸ்லிம் வாக்காளர்களிடம் திருக்குர்ஆனை வைத்து சத்தியப்பிரமாணம் பெற்று வாக்குகளை சேகரித்தார்கள்.

தனது அணிக்கு எதிராக செயல்பட்ட பல இஸ்லாமியர்களை ஜமாத் கட்டுபாடுப் எனும் பெயரில் சமுதாயத்தை விட்டு விலக்கி வைத்துள்ளதும், நான் அண்மையில் மேற்கொண்ட எனது முகவை மாவட்ட சுற்றுப்பயணத்தில் அறிந்த உண்மைகளாகும்.

தமிழக முஸ்லிம்களின் சுதந்திரத்தைப் பறிக்கும் இத்தகு சட்ட விரோத காட்டுமிராண்டித் தனமான செயல்களை கண்டிப்பதும், எதிர்ப்பதும், அத்தகு முஸ்லிம்களுக்கு எனது உயிரை கொடுத்தாவது விடுதலை பெற்றுத் தருவதும் எனது தலையாய கடமையாகும்.

தமிழக முஸ்லிம்கள் லீக்கினை தாய் சபை என ஏற்றுக் கொள்ளவில்லை. அதனை புறக்கணிக்கின்றனர் எனும் எனது கருத்தை எந்த ஆராய்ச்சியின் அடிப்படையில் நான் பெற்றேன் என ஜனாப் சமத் சாகிப் கேட்கின்றார்.

தமிழக முஸ்லிம்கள் தாய் சபையின் சொல் கேட்டு ஒட்டுமொத்தமாக தனது அணிக்கு வாக்களித்ததாக எந்த ஆராய்ச்சியின் அடிப்படையில் அவர் கருதினாரோ அதே அடிப்படையில்தான் எனது கருத்தினையும், நான் பெற்றேன்.

## தாய் சபை எது?

தமிழகத்திலுள்ள முஸ்லிம்களுக்கு இந்திய யூனியன் முஸ்லிம் லீக் ''தாய்சபை'' ஆயின் இந்தியாவிலுள்ளபிறமாநிலங்களிலுள்ள முஸ்லிம்களின் தாய்சபை எது என்பதை ஜனாப்சமதுசாகிப்

விளக்கியாக வேண்டும். அத்துடன் அனைத்திந்திய முஸ்லிம் லீக், தமிழ்நாடு முஸ்லிம் லீக், முஸ்லிம் மஜ்லிஸ், முற்போக்கு முஸ்லிம் லீக் எனும் இயக்கங்கள் தமிழக முஸ்லிம்களின் எந்த சபைகள் என்பதையும் அவர் தெளிவு படுத்தவேண்டும்.

ஓர் இஸ்லாமியன் எனும் முறையிலும், அரசியல் கட்சியைச் சார்ந்த ஓர் அரசியல்வாதி எனும் முறையிலும் தமிழக முஸ்லிம்களது பிரச்சினைகளில் கருத்து கூற எனக்கு இருக்கும் முழு உரிமையை யாராலும் தட்டிப் பறிக்க முடியாது.

தமிழக முஸ்லிம்களைப் பற்றி நான் கருத்து தெரிவிக்கும்போது தமிழ் முஸ்லிம்களைப்பற்றி எடுத்துச்சொல்லி. தேவையற்ற மொழி பிரிவினையை கொண்டுவர முயலுகிறார் முஸ்லிம்லீக் தலைவர் சமத சாகிப்,

அவரது அனைத்துசதித் திட்டங்களையும் சந்திக்க நான் தயாராகஉள்ளேன்.

## எதேச்சாதிகாரம் முறியடிக்கபடும்

இந்த தமிழ் முஸ்லிம் சமுதாயம் தி. மு, க. ஆட்சியில் ''பொள்ளாச்சி ஜமாத்''தில் அரசுஆணை காரணமாக அவமானத்திற்கு ஆட்படுத்தப்பட்ட நேரத்தில் ''இந்த பாறைகள்'' என்ன செய்து கொண்டிருந்தார்கள் என்பன போன்ற உண்மைகளை விளக்கமாக வெளியிடுவது தவிர்க்க இயலாத



தாகிவிடும்.

முஸ்லிம்களை அடக்கி, அவர்களது உரிமைகளை மதத்தின் பெயரால் பறிக்கும் இம் முயற்சியில் மேலும் இந்த ''நோய் சபை'' ஈடுபடுமேயானால் இந்த கொடுமையை லீக் தலைவர்கள் தொடர்பு கொண்டுள்ள இதர இஸ்லாமிய நாட்டு தலைவர்கள்' பிரமுகர்களது கவனத்திற்கு கொண்டு வருவது ஒன்றுதான் மாற்று வழியாக அமைந்திடும்.

உலமா ஓய்வு ஊதியம் போன்ற முஸலிம் நலத்திட்டங்களுக்கு எதிரிகளாக செயல்படும் லீக்கின் சர்வாதிகார, எதேச்சாதிகார ஆணவ போக்கினை கண்டிக்க, முறியடிக்க தமிழக இஸ்லாமிய சமுதாயம் திரண்டெழும் நாள் வெகு தொலைவில் இல்லை என்பதை எச்சரிக்கையாக தெரிவிக்கின்றேன்,

இவ்வாறு அமைச்சர் யூசுப் தெரிவித்துள்ளார்.

---

இன்று மாலை வியாசர்பாடியில்

## ப. உ. ச., மாதவன் பேசுகிறார்கள்

சென்னை, ஜன. 22- கழக அணி வேட்பாளர்களை ஆதரித்து இன்று (22ந் தேதி) மாலை 7 மணி அளவில் வியாசர்பாடி காவல் நிலையம் அருகில் பிருமாண்டமான தேர்தல் பிரச்சாரக் கூட்டம் நடைபெறுகிறது.

தேசிங்கு தலைமையில் நடைபெறும் இந்தக் கூட்டத்தில் பொதுச் செயலாளர் ப. உ. ச., பொருளாளர் மாதவன், பெரம்பூர் தொகுதி கழக வேட்பாளர் சத்தியவாணி முத்து குடிசை மாற்று வாரியத் தலைவர் என். வி. என். செல்வம், ஜெயபால், மற்றும் வட்டசெயலாளர்கள் முனுசாமி, துரைராஜ், தாமோதரன், கோவிந்தராஜ், தேவன், சூசை, சாமிநாதன் உள்ளிட்ட பலர் பங்கேற்று பேசுகின்றனர்.

---

'டாப்கோ' காண்டீன்:

## அமைச்சர் கோமதி-சீனிவாசன் திறந்துவைத்தார்

சென்னை, ஜன. 22- சென்னை ராயப்பேட்டை மருத்துவமனை எதிரே 'டாப்கோ' காண்டீன் ஒன்றை அமைச்சர் கோமதி சீனிவாசன் திறந்து வைத்தார்.

நிகழ்ச்சிக்கு, டாப்கோ தலைவர். கல்யாணி ராமசாமி தலைமை வகித்தார்.

---

## 45 இலங்கைத் தமிழர்களை ஹாலந்து திருப்பி அனுப்பியது

லண்டன், ஜன. 22- இலங்கைத் தமிழர்கள் பலர் மேற்கு ஐரோப்பிய நாடுகளில் குடியேறிருக்கிறார்கள், கிழக்கு பெர்லினுக்குச் சென்று அங்கு பல்வேறு நாடுகளில் அவர்கள் குடியமர்கிறார்கள்.

ஹாலந்து நாட்டில் 45 இலங்கைத்தமிழர்கள் குடியேறச் சென்றனர். அவர்களை அந்த நாடு ஏற்றுக் கொள்ளாமல் திருப்பி அனுப்பியது.

---

# கட்சித் தாவலை தடுக்க அனைத்து எதிர்க்கட்சி ஆதரவு

## ஏகமனதாக சட்டம் ஆகிறது

**சென்னை, ஜன. 22- கட்சித் தாவலைத் தடுக்கும் மசோதாவுக்கு அனைத்து எதிர்க் கட்சிகளும் ஆதரவு அளித்துள்ளன. ஓரிரு நாட்களில் நாடாளுமன்றத்தில் மசோதா கொண்டுவரப்பட்டு ஏகமனதாக சட்டமாக்கப் படும்.**

ஒரு கட்சியின் சார்பில் போட்டியிட்டு நாடாளுமன்றத்திற்கு அல்லது சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் பின்னர் கட்சி மாறுவதைத் தடுக்க சட்டம் தேவை என நீண்டநாட்களாக ஆளும் கட்சி மற்றும் எதிர்க்கட்சிகள் கூறி வந்துள்ளன.

எனினும் இப்போது தான் இந்த விஷயத்தில் எதிர்க்கட்சிகளும் அரசும் கருத்து உடன்பாடு கண்டுள்ளன.

கட்சித்தாவலைத் தடை செய்வதற்கான நகல் மசோதா ஏற்கனவே தயாரிக்கப்பட்டு அதன் பிரதிகள் எதிர்கட்சித்தலைவர்களுக்கு அளிக்கப்பட்டன.

### பேச்சு வார்த்தை

இந்த மசோதாவை இந்தவார கடைசிக்குள் நிறைவேற்ற உடன்பாடு ஏற்பட்டுள்ளது. ஒருசில நாட்களில் நாடாளுமன்ற இரு அவைகளிலும் இது தாக்கல் செய்யப்படும் என அரசு வட்டாரங்களில் கூறப்படுகிறது.

இந்த மசோதா குறித்து பிரதமர் ராஜீவ் காந்தி இரண்டாம் முறையாக எதிர்கட்சித்தலைவர்களுடன் ஒரு மணி நேரம் பேசினார். இந்தப்பேச்சு வார்த்தையில் உடன்பாடு ஏற்பட்டது.

இந்த மசோதாவை பார்லிமெண்டின் பரிசீலனைக் கமிட்டியின் ஆய்வுக்குவிட வேண்டும் என்று கேட்ட எதிர்க்கட்சியினர் பிரதமர் ராஜீவ் காந்தியின் கோரிக்கையை ஏற்று ஆய்வுக்கு விடுவதை வற்புறுத்தவில்லை.

### கட்சித் தாவல் எது?

சபை உறுப்பினர் ஒருவர் சபைக்கு வெளியேயும் கட்சி எதிர்ப்பு பணிகளில் ஈடுபட்டால் அதனை கட்சி தாவல் என்று கருதி அவரது உறுப்பினர் பதவி பறிக்கப்பட வேண்டும்.

சபை உறுப்பினர் ஒருவர் சபைக்கு உள்ளேயும், வெளியேயும் கட்சிக்கொறடாவின் கட்டளையை மீறிச் செயல்பட்டால் அது கட்சித் தாவலாகக் கருதப்படும். இவ்விதம் கட்சி தாவியதாக கருதப்படுகிற உறுப்பினர், சபை உறுப்பினர் பதவியை இழந்தவராகி விடுவார். இதற்கு மசோதாவில் வகை செய்யப்பட்டுள்ளது.

ஒரு கட்சியில் பிளவு ஏற்பட்டால் அல்லது ஒரு கட்சி வேறு கட்சியுடன் இணைந்தால் நிலைமை என்ன என்பது பற்றிய அரசுதரப்புயோசனையை எதிர்க் கட்சிகள் ஏற்றன.

சபையில் ஒரு கட்சி உறுப்பினர்களில் மூன்றில் ஒரு பங்கினர் அக்கட்சியிலிருந்து வெளியேறினால் அது கட்சித் தாவலாக கருதப்படமாட்டாது. அவர்கள் உறுப்பினர் பதவியை இழக்கமாட்டார்கள். அதேபோல ஒரு கட்சி உறுப்பினர்களில் மூன்றில் இரு பங்கினர் வேறு கட்சியில் சேர்ந்தாலும் அது இந்த மசோதாவின்படி கட்சித் தாவலாக கருதப்படமாட்டாது.

பிரதமர் ராஜீவ்காந்தி கூட்டிய கூட்டத்தில் மத்திய அமைச்சர்கள் எஸ். பி. சவான், ஏ. கே. சென், வி. பி. சிங், எச். கே. எல். பகத் ஆகியோர் கலந்துகொண்டனர்.

எதிர்க் கட்சித் தரப்பில் ஜனதா மது தண்டவதே பாரதியஜனதாஅத்வானி, காங்கிரஸ் (எஸ்) சரத் பவார், தெலுங்குதேசம் உபேந்திரா, மார்க்சிஸ்டு அமல்தத்தா, இந்திய கம்யூனிஸ்டு கீதாமுகர்ஜி, ஆகியோர் கலந்து கொண்டனர்.

---

## கழக கொடியேற்று விழா

சென்னை, ஜன. 22— ஆவடி கோவில் பதாகை பகுதியில் கழகக் கொடியேற்றுவிழா கடந்த17-ந் தேதி நடைபெற்றது.

ராஜாமணிதலைமையில் நடைபெற்ற இந்த நிகழ்ச்சியில் ஆவடி சிவா கழக கொடி ஏற்றிவைத்தார்.

நிகழ்ச்சியில் திண்டு உத்தமராஜ், பி. எஸ். ராக், மனோகரன், தர்மன், ராஜாமணி, சந்திரன் உள்ளிட்ட பலர் பங்கேற்றனர். புரட்சித் தலைவர் நடித்த படங்களும் திரையிட்டு காட்டப்பட்டன.

---

## விமான விபத்து: 67 பேர் சாவு

ரெனோ, ஜன. 22- நெவதாவில் உள்ள ரெனோகானன் விமான நிலையத்திலிருந்து புறப்பட்ட லாக்ஹீட் விமானம் விபத்துக் குள்ளாகி தீப்பிடித்து எரிந்தது.

விமானத்தில் இருந்த 67 பேர் கருகிச் செத்தனர். விமான ஓட்டிமட்டும் தீக்காயங்களுடன் ஆஸ்பத்திரியில் சிகிச்சைப் பெற்று வருகிறார்.

---

## மேலும் புதிய டி. வி. நிலையங்கள்

புதுடெல்லி, ஜன. 22- 7வது ஐந்தாண்டுத் திட்டத்தில் மேலும் புதிய தொலைக் காட்சி நிலையங்கள் தொடங்குவது குறித்தும், தொலைக் காட்சியின் பணியினை விரிவடையச் செய்வது குறித்தும் அரசு பரிசீலித்து வருவதாக மத்திய செய்தி அமைச்சர் காட்கில் நாடாளுமன்றத்தில் தெரிவித்தார்.

---

மெட்ராஸ் பர்னிஷிங் கம்பெனி

## புதிய ஷோரூம் திறப்பு

சென்னை, ஜன. 22— சென்னை மேத்த நகர் நெல்சன் மாணிக்கம் சாலையில் மெட்ராஸ் பர்னிஷிங் கம்பெனியின் புதிய ஷோரூம் திறப்பு விழா வரும் 26ந் தேதி காலை 10மணிக்கு நடைபெறுகிறது.

லயன்ஸ் கிளப்பை சேர்ந்த வி. கே. பத்மநாபன் இந்த ஷோரூமை தொடங்கி வைக்கிறார், பாதர் செபஸ்தியான் ஆசி வழங்குகிறார்.

---

கழக அணி வேட்பாளர்களை ஆதரித்து

# வடசென்னை, எழும்பூர், பெரம்பூரில் சிவாஜி 3 நாள் தீவிர பிரச்சாரம்

**சென்னை. ஜன. 22-வட சென்னை, எழும்பூர், பெரம்பூர் ஆகிய தொகுதிகளில் நடைபெறும் தேர்தலில் போட்டியிடும் கழகக் கூட்டணி வேட்பாளர்களை ஆதரித்து சிவாஜி கணேசன் தீவிரப்பிரச்சாரம் செய்கிறார்.**

வடசென்னை, எழும்பூர் பெரம்பூர் தொகுதிகளில் இம்மாதம் 28-ந் தேதி தேர்தல்நடைபெறுகிறது.

கழக அணி வேட்பாளர்கள் பெருவெற்றி அடைய அமைச்சர் பெருமக்கள், கழக முன்னணியினர், காங்கிரஸ் மற்றும் தோழமைக் கட்சித் தலைவர்கள் தீவிர பிரச்சாரம் மேற் கொண்டுள்ளனர்.

கழக அணி வேட்பாளர்களை ஆதரித்து, தமிழ் நாடு இநதிரா காங்கிரஸ் கட்சியின் பிரச்சாரக் குழுத் தலைவர் சிவாஜி கணேசன் 3 நாள் தீவிர பிரச்சாரம் செய்கிறார்.

நாளை (புதன்) மாலை அம்பத்தூர் பஸ்நிலையம் அருகிலும் பெரம்பூர் மேல்பட்டி பொன்னப்ப முதலி தெருவிலும், எழும்பூர் வீராசாமி தெருவிலும் நடைபெறும் பொதுக் கூட்டங்களில் பங்கேற்று சிவாஜி கணேசன் பேசுகிறார்.

24-ந் தேதி மாலை திருவொற்றியூர் எல்லையம்மன் கோவில் தெரு, ராதாகிருஷ்ணன் நகர், துறைமுகம் கிளைவ் பேட்டரி ரோடு ஆகிய இடங்களில் பேசுகிறார்.

25-ந் தேதி மாலை எழும்பூர் மாணிக்க செட்டி தெரு, ராயபுரம் ஆதம் சாகிபு தெரு ஆகிய இடங்களிலும் சிவாஜி கணேசன் பேசுகிறார்.

சிவாஜி கணேசனுடன் தமிழ்நாடு இந்திரா காங்கிரஸ் தலைவர் பழனியாண்டி துணைத் தலைவர் ஏ. ஆர். மாரிமுத்து, தளபதி சண்முகம் ராஜசேகரன், பி. டி. சரசுவதி, மணிவர்மா மற்றும் பலர் பங்கேற்றுபேசுகின்றனர்.

---

# வீரவணக்கநாள் பட்டியல்

(இணைப்பு)

**ராதாகிருஷ்ணன் நகர்**

ஆர். கே. சண்முகம்

**கோபிசெட்டிப்பாளையம்**

புலவர் வேதா
அழகரசன்
விவேகானந்தன் பி. ஏ.
கள்ளிப்பட்டி மணி

---